ஓம்:
மதுரை ஸ்ரீ பரிபூர்ண விநாயகர் துணை
ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகள் துணை





ஐந்து கரத்தாய் அறுமுகற்கு நேர்மூத்தாய்
முந்தஉதித்த முதல்வாவென் - சிந்தை
குடியிருந்தே காக்குங் கோமான் உனையான்
அடிதொழுதேன் வந்தென்னை ஆள்!

- ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்
(அருட்பாடல்)

மாசிலா குருபரன் மாண்புசால் அருளினை
காசினி யோர்கள் கண்டு நன்(கு) உணர்ந்திட
தேசுசால் பிள்ளைத் தமிழ் என ஆக்கிய
மாசிலா சற்குரு தாசனும் வாழ்கவே!

- ஸ்ரீலஸ்ரீ அருள்ஞான செல்வத்தாய்
- (குறிப்பு வரப்பெற்று பாடியது)
ஸ்ரீ அருள்ஞான செல்வச் சன்னதி (காஞ்சி)

# விண்ணொளி காட்டிய வழி

---



இந்த புத்தகத்தை
**ஸ்ரீ இரெட்டியப்பட்டி ஸ்வாமிகளின்**
குருபூஜை 19.12.2006 அன்று
இரெட்டியப்பட்டியில் வெளியிடுகிறோம்.
அன்று எங்கள் அருள்ஞான செல்வத்தாயின்
எண்பது (80வது அகவை) ஆண்டு
நிறைவு நாளாகும்.



O

வெளியிடுவோர் :

**திரு. C.P.K. ஷண்முகசுந்தரம் நினைவு அறக்கட்டளை**

C.V.R. தெரு (செட்டி தெரு), சின்ன காஞ்சிபுரம்



ஓம்

முன்னாள் ஆட்சிமொழி தனி அலுவலர், சைவசித்தாந்த கழக முன்னாள் தலைவர், ஸ்ரீஇரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்க முன்னாள் தலைவர் திரு.கி.இராமலிங்கனார் மற்றும் தமிழ்வேள் சர்.பி.டி.இராஜன், முன்னாள் ஜஸ்டிஸ் கட்சி மற்றும் ஸ்ரீஇரெட்டியப்பட்டி சுவாமிகள் அடியார் ஆகிய மூவரும்

அருட்சட்ட அடியார்கள் பல்லாண்டு பல்லாண்டு வாழ்க என்று பலமுறை வாழ்த்தியிருக்கிறார்கள். அவர்கள் விண்ணிலிருந்து அருள்ஞான செல்வத்தாய் அவர்களின் (80வது அகவை நிறைவு) முன்னிட்டு அருள்மழை தந்து வாழ்த்துக்களைப் பொழிவது மிகையல்ல.



ஓம்

தெய்வத்திரு.திரு.&திருமதி. ஆ. நரசிம்மலு நாயுடு சுவாமிகள், வழிகாட்டும் வான்பொருள் புத்தகத்தின் செய்திகளைத் தொகுத்து வெளியிட்டவர், ஸ்ரீ இரெட் டியப்பட்டி சுவாமிகள் சங்க முன்னாள் செயலர், ஆகிய இத்தம்பதிகளுக்கு பிரியமானவரான அருள்ஞான செல்வத்தாயின் 80வது அகவைக்கு வழி காட்டும் வான்பொருள் சார்பாக விண்ணிலிருந்து வாழ்த்துக்களை தெரிவிக்கின்றனர்.



ஓம்

சிற்பக்கலாநிதி, மாமல்லபுரம், சிற்பக்கல்லூரி முதல்வர்

மேன்மைமிகு. **வை. கணபதி ஸ்தபதியார்** அவர்கள்

உயிருக்கு உயிராக விளங்கும் இறைவனுக்குத் தொண்டு செய்தல் என்பது என்ன? இம்மையிலும் மறுமையிலும் உயிரினங் களுக்கு. இன்பம் விளைவிக்கும் செயல் அனைத்தும் இறைத் தொண்டேயாகும்.

1952ம் ஆண்டு பாலகவி சுவாமிகள் என் தந்தையாரைக் காண வந்தபோது முதன்முதலில் அவரைக் கண்ட நான் பெரிதும் அவர்பால் ஈர்க்கப் பெற்றேன். அவருடையே சொல்வன்மை, இளமைத்துடிப்பு, சுறுசுறுப்பு, செயலாற்றல் ஆகிய பண்புகள் இன்றும் என் கண்முன் நிழலாடுகிறது. குருநாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் ஆலயம் அமைப்பதற்காக பாலகவி சுவாமிகள் மீண்டும் 1959ல் என்னிடம் வந்தார். நான் சிற்பியாக முதன்முதல் ஆரம்பித்த திருக்கோயில் குருநாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் திருக்கோயிலே ஆகும். என்னை அப்பணிக்கு ஆளாக்கி, அளவற்ற அன்பைச் சொரிந்து என் வாழ்வில் பெருந்திருப்பத்தையே உண்டுபண்ணி விட்டார் பாலகவி சுவாமிகள். அவ்வரிசையில் குருநாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளைப் பற்றி புகழ் பாட பாலகவி, பாலகவி புகழ்பாட திருமதி.சு. மங்கையர்க்கரசியார் என்னும் அருள்ஞானச் செல்வத்தாய் வாய்த்திருக்கிறார்கள். குருநாதர் திருவருளால் கருணை அமுது என்ற புத்தகத்தின் நூலாசிரியராகிய அருள்ஞானச் செல்வத்தாய் அவர்கள் அழகிய சிறு கோயில் ஒன்றினை பாலகவி சுவாமிகளை திருஅடக்கம் செய்த இடத்தில் அமைத்துள்ளார். தற்போது, கருங்கல் திருப்பணிக்குழுவின் தலைவராக இருந்து திருப்பணி செய்கிறார். அடியார் கூட்டம் வழி வழியாக விளங்கி வளர வேண்டும் என்று மனமார வாழ்த்துகிறேன். அத்தகு பெருமைக்குரிய அருள்ஞானச் செல்வத்தாய் அவர்கள் நீடூழி வாழ்க பல்லாண்டு!



இடது : பிள்ளையார்குப்பம் ஸ்ரீ அருட்சக்தி அன்னை அவர்கள்

வலது : கச்சிமாநகர் ஸ்ரீ அருள்ஞான செல்வத்தாய் அவர்கள்

## சட்டத்தின் சிறப்பான கொள்கைகளின் சுருக்கம் வருமாறு:-

1. ஒவ்வொரு நாளும் விடியற்காலை 4 மணிக்குமேல் 5 மணிக்குள் பச்சை நீரில் முழுக வேண்டும்; தலை நனைய நீராட வேண்டும்.
2. குடிக்கவோ, குளிக்கவோ, எக்காரணம் கொண்டும் வெந்நீரைப் பயன்படுத்தலாகாது.
3. நீராடி முடிந்ததும், விநாயகர் கோவிலுக்குச் சென்று மும்முறை வலம் வந்து, மனமுருகி வழிபட்டு வணங்க வேண்டும். (எந்த மதத்தினராயினும், தத்தமக்குரிய வழக்கப்படி வழிபாடு செய்யலாம்.) தண்ணீரில் திருநீறும் துளசியும் இட்டு உள்ளுக்குப் பருக வேண்டும்.
4. உலகெலாம் படைத்துக் காக்கும் ஒரு பரம்பொருளைப் பல மதத்தினர் பல உருவங்களில் வழிபட்டுப் பயனடைகின்றனர்; ஆனால், பரம்பொருள் ஒருவரே என்ற தீர்மானமான எண்ணம் கொள்ள வேண்டும். எந்த மதத்தினரையும் நிந்தித்தல் கூடாது.
5. புலாலுண்ணல், பொய் பேசல், கள் குடித்தல், சூதாடுதல், திருடுதல், புகைபிடித்தல், புகையிலை முதலிய லாகிரி வஸ்துக்களைப் பயன்படுத்துதல், பொல்லாரோடு உறவாடுதல் முதலியன ஆகாது.
6. எந்நோய் வரினும், எத்துயர் வரினும், எத்தகைய சிக்கல் ஏற்படினும், ஒரு மருத்துவரையோ, ஒரு மனிதரையோ தஞ்சம் என்று அடையாது, எல்லாம் வல்ல இறைவனையே தஞ்சம் எனப்பற்றி, உறுதியாக நின்று, உயர்பயன் பெறுதல்.
7. நோயுற்ற காலை இருவேளை பச்சை நீரில் முழுகித் திருநீறு பூசி, திருநீறும் துளசியும் இட்ட தீர்த்தம் அருந்தி மனமுருகி இறையருளை நாடி அவனருள் துணையால் நோய் நீக்கம் பெற்றுப் பயனடைய வேண்டும். விஷக்கடி, வெட்டுரணம், பிரசவம் முதலிய எதற்கும் மருத்துவம் நாடாது, திருநீறு, தீர்த்தம் கொண்டே அருட்பயன் காண வேண்டும்.
8. வைத்தியம், ஜோதிடம், மாந்திரிகம் இவைகளை நம்பி ஏமாறாமல், மருந்து, மணி, மந்த்ரம் முதலியன மருவாமல், எல்லாம் வல்ல கடவுளே கதி என்ற பரிபூர்ண நம்பிக்கையோடு, தளராத நெஞ்சத்துடன், இறைவனருள் நாடி அருளாற்றலால் அனைத்து இடுக்கண்களையும் வென்று நற்பயன் பெறுதல்.
9. இந்தத் தீது அகன்றால், இந்த நன்மை கூடினால் இன்னது செய்கிறேன் என்று தெய்வத்திற்குப் பிரார்த்தனை செய்து கொள்ளும் பழக்கத்தை கைவிடுதல்.
10. வெள்ளிக்கிழமை தோறும் ஒரு வேளையாவது உணவைக் குறைத்துக் கொண்டு, விரதம் இருந்து பயில வேண்டும்.
11. எப்போதும் ஆண்டவர் திருநாமத்தை மனனம் செய்த வண்ணம், உடல் பொருள் ஆவி அனைத்தையும் உடையவனிடம்ட ஒப்படைத்து, அச்சமும் பற்றும் அணுவளவும் இன்றி, அருள் வாழ்வு வாழப் பழகுதல் வேண்டும்.
12. தினந்தோறும் ஆண்டவர் அருளை வேண்டி, எந்தப் பிற எண்ணமும் இன்றி, அமைதியாக அமர்ந்து, அருள் நிட்டை பேணி, ஆனந்தம் எய்தப் பழக வேண்டும்.
13. சட்ட அனுட்டானத்தில் உள்ளவர்களில் யாருக்காவது உலகில் உலாவும் காலம் முடிந்து உயிர் அடக்கமாக நேர்ந்தால் அதற்காக வருந்தாது, அவர்களின் உடலை எரிக்காது, மண் மறைவு (சமாதி) செய்தல் வேண்டும்.
14. உலக விவகாரங்களில் சிக்கல்கள் நேரும்போது, அறக்கடலாகிய இறைவனின் அருள் துணை நாடி அறமுடிவைப் பெற முயல வேண்டுமேயன்றி, அறமன்றம் நாடி விவகாரங்களை விபரீதமாக வளர்த்துக் கொள்ளுதல் கூடாது.
15. சட்ட நெறியில் ஈடுபட்டுள்ளோர் தவறி நடந்தால், அவர்கட்கு அறிவுறுத்தித் திருவருளால் உடல் உபாதி முதலிய தண்டனை ஏற்படலாம். அவர்கள் உடனே உண்மையை உணர்ந்து, தவறு புரிந்தமைக்கு மன்னித்து அருள் புரியுமாறு இறைவனை உருகி நினைந்து வேண்டிக் கொண்டால், உடனே பரிஹாரம் ஏற்படும். ஏற்பட்ட தண்டனை நிவர்த்தியாகும்.
16. வேலைக்கு ஏற்ற கூலி என்பது போல், எந்த அளவு உறுதியும் ஊக்கமும் கொண்டு கைப்பற்றுகிறோமோ, அந்த அளவுக்குக் கைமேல் பயன் கிட்டுவதையும், தூய நல்வாழ்வு அமைவதையும், இறைவன் அருள் முன்னின்று எல்லா வகைக்கும் வழிகாட்டி அழைத்துச் செல்வதையும், நாம் நன்கு உணர்ந்து அருள் துணைக் கொண்டு முன்னேறலாகும்.



ஓம்

# அருள்ஞான செல்வத்தாய்

## (திருமதி. மங்கையர்க்கரசி)

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்க
முன்னாள் தலைவர்
அவர்களின்

# 80வது அகவை நிறைவு

## 19.12.2006

(ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் குருபூஜை
நன்னாளில் 80வது அகவை பூர்த்தி)

உலகம் தோன்றிய நாள் முதல் உலகின் கண் பல பாகங்களிலும், பல காலங்களிலும் அருளாளர் பலர் தோன்றி, அருள் நெறி கண்டு, இன்பம் அடைந்துள்ளனர். தாம் பெற்ற பேரின்பத்தை பலரும் பெற வேண்டும் எனக் கருதி முயன்றுள்ளனர். அவர்கள் அனைவரின் கருத்தும் செயல்முறையில் நிறைவேற, எல்லாம் வல்ல பரம்பொருளின் அருட் பெருங்கருணையே ஒருருத்தாங்கி உலகின் கண் அவதரித்ததைப் போன்று, செந்தமிழ் நாட்டில் ×ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் (இயற்பெயர் : சுப்ரமணியம்) அவதரித்தார்.

இவர்தாம் பெற்ற பேரின்பத்தை எவ்வுயிரும், எவ்விதத் தடையுமின்றி எந்த வேறுபாடுமின்றி எளிய முறையில் பெற்றுய்ய வேண்டும் என்று கருதி சிறந்த ஒரு செந்நெறியை வகுத்தருளினார். இயற்கையுடன் ஒட்டிய நெறியைச் சட்டம் என்று அதற்கு அருட்சட்டம் என்று வகுத்துப் பெயரிட்டார். இக் கொள்கையை பரப்பும் நோக்குடன் அடியார்களை தடுத்தாட்கொண்டு தேர்ந்தெடுத்தார். அந்த வரிசையில் காரைக்கால் அம்மையாரே மீண்டும் ××பிள்ளையார் குப்பம் ஸ்ரீ அருட்சக்தி அன்னையார் வடிவில் தோற்றுவித்தார். எல்லோருக்கும் சட்டாம்பிள்ளையாகத் திகழ்ந்து பல அற்புதங்களை செய்து அடியார்களை நல்வழியில் ஈர்த்தது யாவரும் அறிவர்.

பம்பாயில் கணக்கராக பணிபுரிந்த சமயம் மதுரை ஸ்ரீ மீனாட்சி அம்மை ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளை கனவில் ஈர்த்து, தமிழ்நாட்டிற்கு நீ வந்து முத்து முத்தாக அடியார்களைத் தேர்ந்தெடு என்று உத்தரவு தந்தார். அதன்படி பிள்ளையார் குப்பம் ஸ்ரீ அருட்சக்தி அன்னை தோன்றினார். பின்னர் அவர்களின் கடைக்கண் பார்வையால் திருக்கடையூர் ஸ்ரீ அபிராமவல்லியே மீண்டும் அவதாரம் எடுத்தார் போன்று மார்கழி மாதம் அனுஷ நட்சத்திரத்தில் 02.01.1926 ××××ஸ்ரீ காஞ்சி மாநகரில் சைவநெறி, சைவ வேளாளர் திரு.சுந்தரராஜ முதலியாருக்கும், திருமதி. சாரதாம்பாள் அம்மையாருக்கும் முதல் பெண் சிசுவாக அவதரித்தார். மங்கையர்க்கரசி என்று பெயர்

பெற்று தந்தை வளர்ப்பில் உண்மையிலேயே அரசியாகத்தான் எல்லா செயல்களிலும் திகழ்ந்தார். இவர் தன் தந்தையுடன் சிறுவயது முதல் எல்லா கோவில்களுக்கும் சென்று மிகுந்த பக்தி நெறி பரவசத்துடன் பூஜை செய்து, புராணங்களையும், இதிகாசங்களையும் நன்கு உணர்ந்து தேர்ச்சிப் பெற்றார். இவருக்கு மிகவும் பிடித்த நூல் பெரிய புராணம் ஆகும். தந்தையார் போதிக்க குருவழிபாடு குரு பக்தியை முறையாக தெரிந்து கொண்டார்.

இவருடன் பிறந்தவர்கள் எட்டு பேர். அவர்களில் முதலில் மங்கையர்க் கரசியார். பிறகு 2. ஞானாம்பாள், 3. ஜெயலட்சுமி, 4. குகானந்தம், 5. மீனாட்சி, 6. ஆறுமுகம், 7. சுவாமிநாதன், 8. சிவா, 9. சண்முகம் ஆகியோர் ஆவர். ஒன்பது வாயிலில் ஆறு ஆதாரங்கள் ஆகிய சக்கரங்களை வாசியோகம் மூலம் அருட்பாடல்களைக் கொண்டு கற்றுக் கொண்டார். சில சமயம் இவர் ஔவையாரோ? அல்லது காரைக்கால் அம்மையாரோ, அல்லது திருக்கடையூர் அபிராமவல்லியோ அல்லது திருநாவுக்கரசரின் குருவாகிய சகோதரியா (திலகவதியார்) என்றெல்லாம் நமக்குத் தோன்றும் வகையில் அவர் திகழ்ந்தார். ஏனென்றால் இவரது தந்தை ஒரு சிறந்த சிவபக்தர். காஞ்சி மாநகரில் வசிக்கும் பக்தர்களுக்கு முக்தி கொடுக்கும் மனப்பாங்கில் காட்சி கொடுத்து வீற்றிருக்கும் திருகாமாட்சி உடனுறை திருஏகாம்பரநாதருக்கும் அனுதினமும் ஸ்ரீ ஆண்டாள் நாச்சியாருக்கு ஒப்ப, பக்தி பரவசத்தை குழைத்து, தமிழ் இன்பத்தை பிசைந்து, தமிழ் அமுத திருக்கண் (அன்பு) பார்வையால் பூமாலை தொடுத்து வருதலையே தனது தலையாய கடமையாக வாழ்ந்து வந்தார். அப்பூமாலைகளை கோயில்களுக்கு சமர்பிப்பார், அர்ப்பணிப்பார்!

இக்கலையை தன் தந்தையார் வாயிலாக கற்று சேவை புரிந்தார். மேலும் கந்தர் கலிவெண்பா, கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம், திருவிளையாடல்புராணம், பெரிய புராணம், நாலாயிர திவ்யபிரபந்தம் முதலிய தலைப்புகளில் சிறுவயது முதலே சொற்பொழிவு ஆற்ற பழகிக் கொண்டு பள்ளிகளிலே புகழ் அனைத்தும் தனக்கே உரியதாக்கிக் கொண்டார். இது எட்டு வயது முதல் தொடங்கப்பெற்றது. மனப்பாடமாக ஒப்புவித்து அதற்கு இணையாக சான்றுகளை திருக்குறளிலும், நாலடியார், பழமொழி முதலியவற்றின் மூலம் மேற்கோள் காட்டி யாவருடைய கைத்தட்டல்களையும் புகழ் மாலையாகப் பெறுவதில் நயம் கண்டார்.

இவர் தனது சிறுவயது முதல் காஞ்சி குமரகோட்டத்தில் உரையும் திரு சுப்ரமண்யசுவாமியிடம் அலாதியான பக்தியும் கொண்டவர். பெரிய குடும்பத்தில் பெரிய மகளாக பிறந்ததால் என்னவோ, குறிப்பறிந்து செயல் ஆற்றுவதில் வல்லவராகத் திகழ்ந்தார்.

**திருமண வாழ்க்கையும் அருட்சட்டம் ஏற்ற முறையும்:-**

திருமணத்திற்கு முன் எட்டாம் வகுப்பு முடித்து இருந்தார். 1947ல் தை மாதம் அமாவாசை அன்று முதன்முதலாக காஞ்சிபுரத்தில் அருட்சட்டம் ஏற்றுக் கொண்டார்.

அவ்வாண்டே தனது 21வது வயதில் திருவாளர் சதாசிவ முதலியாரை திருமணம் செய்து கொண்டு இல்லறத்தை நல்லறமாக உணர்ந்து வாழ்க்கைப் பயணத்தை தொடர்ந்தார். 1948ம் ஆண்டில் இவருக்கு ஓர் பெண்மகவு பிறந்தது. அதற்கு கஸ்தூரி என்று திருநாமம் சூட்டினார். 1950ம் ஆண்டு ஓர் ஆண் மகன் பிறந்தார். அவருக்கு குருநாதன் என்று பெயர் சூட்டினார். இல்வாழ்க்கையின் நிறைவு மூன்று ஆண்டுகளே! பிறகு இவரது கணவர் இறைவனடி சேர்ந்தார். அதன்பின் வாழ்க்கை இருள் சூழ்ந்தது. அச்சமயம் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கச் செயலர் திரு.ஆ. நரசிம்முலு நாயுடு சுவாமிகளின் நட்பு கிடைத்தது. விழுப்புரம் விருதாசலம் பாதையில் உள்ள திருவெண்ணை நல்லூரில் உள்ள திருச்சாத்தனூருக்கு சென்று ஸ்ரீ முத்துராம இரெட்டியார் என்னும் திருச்சாத்தனூர் சுவாமிகளின் நட்பும் ஆதரவும் கிடைத்தது. இந்த சுவாமிகள் பிள்ளையார்குப்பம் ஸ்ரீ அருட்சக்தி அன்னையின் மூத்த சகோதரர் ஆவார். சித்தர்க்கு ஒப்பானவர். வழிகாட்டும் வான்பொருள் என்ற தமிழ் நூல் இவரை மிகவும் ஈர்த்ததால் அருட்சட்ட அடியாரானார். திருச்சாத்தனூரில் சொற்பொழிவு ஆற்றிக் கொண்டு இருந்த ஆனத்தூர் திரு. பாலகவி சுவாமிகள் நட்பும் 1965ல் கிடைத்தது. ஸ்ரீ அருட்சக்தி அன்னையின், ஆசியும் அங்குதான் பெற்றார். அப்பொழுது திரு பிள்ளையார் குப்பம் ஸ்ரீ அருட்சக்தி அன்னையின் நோக்கமும், பார்வையும் நமது மங்கையர்க்கரசி அம்மையார் மீது பட்டது. விபூதிப் ப்ரசாதம் கொடுத்து தாயை எதிர்கால சட்டாம் பிள்ளையாக நீ ஆவாய் என்றும் வரம் தந்தார். அதற்குப்பின் திருபாலகவி நட்பு நாளுக்கு நாள் அதிகரித்து பல புதிய அடியார்களை அருட்சட்ட கோட்டைக்குள் சேர்ப்பித்தனர். பின்னர் இவர் பி.ஏ., (தமிழ்) எம்.எ,. (தமிழ்) படித்து முதல் வகுப்பில் தேர்ந்து அரசு உயர்நிலை பள்ளிக்கு தலைமை ஆசிரியை ஆனார். அதோடு மட்டும் நில்லாமல் அருட்சட்டத்தில் சிறந்த அடியாராகியதால் திருபாலகவி சுவாமிகள் அம்மையாருக்கு அருள்ஞான செல்வத்தாய் என்றும் இவர்கள் இல்லத்தில் இருக்கும் பூஜை அறைக்கு அருள்ஞான செல்வச் சன்னதி என்று கூறும் வகையில் பட்டத்தைக் கொடுத்தார்.

நல்லிருடிப்பட்டி என்னும் நகர் விளங்க
நாகலாபுரம் விளங்கச் சொல்லரிய
பெருமைமிகு திருவருட்சட்டம்
விளங்கத் துணிந்து பேணும்
இல்லறத்தார் இன்னடியா ரினம் விளங்க
எழில்ஞாலம் விளங்கப் பாரில்
பல்லறமும் விளங்க வந்த தாயே! -அருள்ஞான
செல்வச் சன்னதியே! நின்பாத மலர் போற்றி போற்றி!

- ஸ்ரீ ஆனத்தூர் பாலகவி சுவாமிகள்

---

**பாலகவி சுவாமிகளின் அறவுரை:** அகக்கண் பெற விழை, அருளே நற்பொருள், அறநெறி போற்று, ஆக்கம் பெற உழை, ஆணவம் அகற்று, ஆதவன் போல் ஒளிர், இகத்தினில் பரம் காண், இதயத்தூய்மை கொள், இமயம் போல் உயர், ஈகையை மறவேல், ஈரநெஞ்சோடிரு, உத்தம னாயிரு, உலகம் ஓர் பள்ளி, உறுதியைக் கைவிடேல், ஊக்கமே ஆக்கமாம், ஊன் பிறர்க்குதவு, ஊறு செய நினையேல், எங்கும் பரன் உளன், எண்ணுக நலனே, எதனையும் விரும்பேல், ஏதும் பிழை செயேல், ஏவுமுன் செயல் புரி, ஏழைகட் குதவு, ஐங்கரனைத் தொழு, ஐம்புலன் அடக்கு, ஐயமின்றிப் படி, ஒரு நெறி கடைப்பிடி, ஒருவனே தேவன், ஒழுக்கமே உயர்திரு, ஓங்காரன் பதம் தொழு.

**அருட் சட்டத்தில் ஆற்றிய பெருந்தொண்டு:-**

×××16.05.1971 அன்று ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் இலக்கிய பதிப்பகம் என்ற ஸ்தாபனம் தொடங்கப்பெற்றது. அதில் ஆலோசனைக் குழுத் தலைவராகவும் இருந்து பல புத்தகங்களை ஆண்டவர் மீது பாடியும் பல கோயில்களில் உரையாடியும் அருட்சட்டத்தைப் பரப்பினார். முதல் கூட்டம் சென்னை தங்கசாலையில் உள்ள ஸ்ரீ ஏகாம்பரநாதர் திருக்கோயிலில் வழிகாட்டும் வான் பொருள் என்ற தலைப்பில் மிகச் சிறப்பாகப் பேசினார். இரண்டாவது கூட்டம் திருமயிலை கபாலீசுவரர் கோயிலில் திருவாகீசகலாநிதி கி.வா.ஜ. தலைமையில் அருட்சட்டத்தைப் பற்றிப் பேசி பாராட்டுதல்களைப் பெற்றார். மூன்றாம் கூட்டம் சென்ன மல்லீஸ்வரர் மற்றும் சென்ன கேசவப் பெருமாள் கோயில் (சென்னை) ஸ்ரீ ஆண்டாள் சன்னதியில் திருப்பாவையும் அருட்சட்டமும் என்ற தலைப்பில் மிக அற்புதமாக பேசினார். அப்பொழுது அவர் கூறியதாவது :-

மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளாம்
நீர் ஆடப் போதுவீர் போதுமினோ நேரிழையே - திருப்பாவை

என்பதில் நீர் என்ற சொல்லுக்கு பச்சை நீர் என்று பொருள். மார்கழி நோன்பில் பச்சை நீரில் தலை நனைய குளித்தால் கோடை காலத்தில் எளிதாமே! என்றார். தலை நனைந்தால்தான் முத்து கிடைக்கும். முத்து குளிப்பது ஓர் தென்கடலிலே என்றார் பாரதி புலவர்.

கலசப்பாக்கம் என்ற ஊரில் அருள்ஞானச் செல்வத்தாய் பாமர மக்களுக்கு புரியும்படியாக பேசியதன் சுருக்கம் பின்வருமாறு:

ஒரு சிறுவனிடம் தாயானவள் 4 அணா கொடுத்து அச்சு வெல்லம் சமையலுக்காக வாங்கி வரச் சொன்னாள். கடைத்தெருவில் ரங்கராட்டிணம் பார்த்த சிறுவன் தன் கையில் உள்ள 4 அணா கொடுத்து ரங்க ராட்டிணம் ஏறி கிர்..... என்று பலமுறை சுற்றி இன்பம் கண்டான். முடிந்தபின் கீழே இறங்கினான். பின்னர் தாயார் நினைவு வந்தது. வீட்டிற்குப் போனால், அம்மா அடிப்பாளே! என்ன செய்வது என்று முழித்தானாம். அதுபோல் நமது வாழ்க்கையும் ரங்கராட்டிண பயணம்தான். இது ஒரு மாயை. மாயையில் சிக்காமல் வாழ்க்கை என்ற கடலில் பிறவிப் பெருங்கடல் நீந்துவார், நீந்தாதார் இறைவனடி சேராதார் - என்ற குறளைச் சுட்டிக்காட்டி எளிதாகப் பேசி பாராட்டுக்களைப் பெற்றார். இப்படி, பண்ருட்டி, நெல்லிக்குப்பம், பிள்ளையார் குப்பம், திருவிசைநல்லூர், கும்பகோணம், கடலூர், சிதம்பரம் சபாபதி கோயில், மாயவரம், திருச்சி, மதுரை முதலான ஊர்களில் பேசி தமிழ்வேள் திரு.பி.டி. இராஜன், மதுரை திருவள்ளுவர் கழகத் தலைவரிடமும் பாராட்டுக்கள் பல பெற்றார்.

பின்னர் சற்குருதாசன் அறக்கட்டளை ஸ்தாபித்தார். கருணைமிகு வள்ளல் அருள்நிறை சரிதம் என்ற புராணத்தை பாலகவியுடன் சேர்ந்து இரெட்டியப்பட்டி சுவாமிகளின் வரலாற்றை எழுதி வெளியிட்டார்.

பின்னர் தனது மகள் கஸ்தூரிக்கும் தனது தம்பியான சண்முகத்திற்கும் 1971ல் திருமணம் செய்து வைத்தார். 1974ல் பேரன் குருசாமி பி.ஈ., பிறகு 1984ல் பேத்தி மீனாட்சி என்கின்ற வரலட்சுமி எம்.பி.ஏ., பிறந்து வளர்ந்தார்கள்.

மேலும் தனது மகன் குருநாதன் எம்.எஸ்ஸிக்கும் ப்ரேமாவிற்கும் திருமணம் முடித்தார். 1978ல் இவர்களுக்கு குருலட்சுமி எம்.பி.ஏ., என்ற பேத்தி, மற்றும் 1981ல் சுப்ரமணியம் (எம்.சி.ஏ.,) என்ற பேரனும் பிறந்து வளர்ந்தார்கள்.

மகன்வழி பேத்தி குருலட்சுமியை தனது தங்கை மீனாட்சி மகள் பானுமதி சண்முகசுந்தரம் வழி மூத்தபேரன் திரு. சங்கரநாராயணனுக்கு 07.09.1996ல் திருமணம் செய்வித்து அவர்கள் செவ்வனே வாழ்ந்து வருகின்றனர். இளைய பேரன் திரு.எஸ். சத்தியநாராயணன், டி.எச்.எம்.சி.டி., கவிதா என்ற நங்கையை 07.02.2000ல் திருமணம் நடைபெற்றது.

பிறகு இறைத்தொண்டில் தீவிரமானார். 09.06.1972, வெள்ளிக்கிழமை ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் அருட்சட்ட அடியார்கள் இரண்டாம் பாத யாத்திரைக்குழு 15 பேருக்கு தலைவராக வீற்றி 48 நாட்களில் 500 கி.மீ. பாதயாத்திரை செய்து இரெட்டியப்பட்டி சேர்ந்து சாதனை படைத்த பேரரசியாவார்.

பிறகு ஞானம் என்ற தலைப்பில் ஓர் கட்டுரை ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் குருபூஜை பொன்விழா மலரில் அற்புதமாக இறை தூண்டுதலால் எழுதினார். ஸ்ரீபாலகவி சுவாமிகள் மீது ஷோடசம், அஷ்டோத்ரம், ஸஹஸ்ரநாமம் முதலியவற்றை புத்தகமாக வரைந்தார்.

அதன்பின் ஸ்ரீ பாலகவி சுவாமிகளின் 75வது அகவையை சிறப்பாக விழா எழுப்பி சிறப்பித்தார்.

ஸ்ரீ இரெட்டியப்பட்டியில் ஸ்ரீகுருநாதருக்கு கருங்கல் கோயில் கட்டி கும்பாபிஷேகம் அதிவிரைவில் நடத்த கங்கணம் பூண்டு உறுதி கொண்ட மனதுடன் அங்கு தவக்கோலத்தில் அமர்ந்திருக்கிறார். பல சமயங்களில் பல காரணங்களுக்காக உண்ணாநோன்பு இருந்து சாதனை படைத்தார்.

ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கத்தலைவராக பதவி ஏற்று பல நற்காரியங்களையும் செய்து முடித்தார்.

இவர் 1969ல் சென்னை சுதந்திர போராட்ட வீரர் திரு.டி. ஜெகன்னாத குப்தா சுவாமிகளுக்கு குறிப்பு வந்ததின் பயனாக அருட்சட்டம் ஏற்க வைத்தார். அவ்வழியில் அவர் மகன் திரு.டி.ஜே. குபேந்திரனையும் அதே பாங்கில் 1970ல் ஏற்றார். திருமயிலை திருமதி. சாந்தம்மாள் அவரது கணவர் கோடியர்ச்சனை டி.பி. சக்கரபாணி செட்டியார், மன்னார்பாளையம் சுவாமி, இன்னும்பலப்பல பெரியவர்களை அருட்சட்டத்தில் சேர்ப்பித்து அடியார்களை ஆட்கொண்டார். பலருக்கு விபூதியை கொண்டே பல நோய்களைத் தீர்த்து வைத்தார். பலருக்கு வாழ்க்கையை சுலபமாக்கித் தந்தார்.

மேலும் ஆண்டவர் குறிப்பின்படி இச்சிறுநூலை ஸ்ரீ அருள்ஞான செல்வத்தாய் 80வது அகவை பூர்த்தி ஆன நன்னாள் ஆகிய இன்று 19.12.2006 அவர்களுக்கு சமர்ப்பித்து அடியார்களுக்கு காணிக்கை ஆக்கிக் கொள்கிறோம்.

குறிப்பு : ×இரெட்டியப்பட்டி எனும் ஊர் மதுரைக்கு தெற்கே 52 மைல் (85 கி.மீ.) அருப்புக்கோட்டை, பந்தல்குடி வழியாக விளாத்திகுளம் தாலுக்கா, நாகலாபுரம் சென்றால், கிழக்கே 1 கி.மீ. தொலைவில் உள்ளது. அங்குதான் குருநாதர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் தான் பிறந்த வீட்டினுள் அதே அறையில் தன்னை திருக்காப்பு செய்து கொண்டார் என்பது சிறப்புச் செய்தி.

×× பிள்ளையார் குப்பம் என்பது பாண்டி, கடலூர் சாலையில் கிருமாம்பாக்கம் பேருந்து நிலையத்திலிருந்து உள்ளே 2 கி.மீ தொலைவில் உள்ளது.

××× 1971 (எழு, பற்று, ஒன்று என்று தாய் கூறுவார்கள்) ஸ்ரீ பாலகவிசுவாமிகள் மற்றும் ஸ்ரீ அருள் ஞானத்தாய் இணைந்து இயற்றிய நூல்கள் பின்வருமாறு:

(தமிழில்) 1. அருட்பிரசாதம், 2. திருஉந்தியார், 3. பேரின்ப வேட்கை, 4. குரு அருள் வேட்டல், 5. இருடியர்பட்டி குருநாதர் பிள்ளைத்தமிழ், 6. அருட்கோவை, 7. (தெலுங்கில்) அனுக்கிரஹப்ரசாதம், 8. ஆங்கிலத்தில் **"The Kindly Light That Leads"** 9. கருணைமிகு வள்ளல் அருள்நிறை சரிதம் என்ற ஆண்டவர் புராணம், 10. ஸ்ரீபாலகவி வரலாறு கருணை அமுது என்ற புத்தகத்தையும் தனியே வரைந்த பெருமை இவர்களை வந்தடையும். 11. ஸத்குருநாதர் திருவடி புகழ்ச்சி, 12. மதுரை பரிபூர்ண விநாயகர் திருவெண்பாவை, திருபள்ளி எழுச்சி, திருப்பல்லாண்டு, 13. மதுரை பரிபூர்ண விநாயகர் கலிவெண்பா, 14. ஸத்குரு நாமாவளி, 15. இரெட்டியப்பட்டி ஸத்குருநாதர் அர்ச்சனை... முதலியவை தாயின் தூண்டுதலால் ஸ்ரீ பாலகவிக்குக் குறிப்புத் தெரிந்து எழுதியது.

×××× **காஞ்சி** என்றால் ஒட்டியாணம் என்று பொருள்.

**80வது அகவை நிறைவு நன்னாளும், குருபூஜை நன்னாளும் இணைந்த இத்திருநாளில் இவர்களின் நல்லாசிகளை விரும்பும்**

**அருட்சட்ட அடியார்கள்**

**ஓம் தத் ஸத்**

## சுவாமிகளின் அருள்வாக்கு:

சுவாமிகள் அடியார்களுக்கு கடிதம் எழுதுகையில் அடியார்கள் பாததூளிகளுக்கு அநேக வணக்கம் என்று எழுதச் சொல்வார்கள். இதன்மூலம் அடியார்களை அவர் எவ்வளவு போற்றுகின்றார் என்பது நம்மை நெக்குருகச் செய்கின்றது.

அடியார்கள், ஆண்டவர் மறைந்துவிட்டால் என்ன செய்வது, என்று ஏக்கமுற்றபோது சாமி அடைஞ்சும்னு கவலைப்படுதோ? இது அடைய வந்த சாமியல்லவே! இந்த சாமி எப்போதும் இருக்கும் என்று கருணையோடு கூறியுள்ளார்கள்.

## திருப்பாதுகை மகிமை

விடியு முனேதணி ராடுவீ ரென்று
விளக்கி யெழுப்பிடு பாதுகையே
படியு மனம்பெறத் தீர்த்தம் அருத்திநற்
பக்குவம் மிக்கருள் பாதுகையே
நோயணு காது தடுத்தருள் செய்துநன்
நோன்மை வழங்குமொண் பாதுகையே
தாயினு மிக்க தயாநிறை வோடு
சராசரங் கட்கருள் பாதுகையே
-அருளுந்தப் பாடியது-

பாதகம் யாவும் மன்னித்து மெய்ஞ் ஞானப்
பயிற்சி யளித்தருள் பாதுகையே
சூதகல் பேரரு ளாளருள் என்றும்
துலங்கு பராத்பரர் பாதுகையே
பற்பலகோடி பிறப்பைத் தவிர்த்தருட்
பான்மை விளக்குமொண் பாதுகையே
கற்பனை காணரிதான கவின்கொடு
கடையன் சிரத்தமர் பாதுகையே
- ஸ்ரீ பாலகவி சுவாமிகள்

ஓம்

## பவள விழா வாழ்த்து


அருட்சட்ட அடியார்
ஸ்ரீ பாலகவி சுவாமிகள்

சுடர் விளக்காயினும் தூண்டுகோல் ஒன்று வேண்டும் என்றவாறே காஞ்சிபுரம் ஸ்ரீலஸ்ரீ அருள்ஞானச் செல்வத்தாய் அவர்கள் ஊக்க மிகஊட்டி கட்டாயமாக புராணத்தை எழுத வேண்டும் என்று என்னைத் தூண்டினார். குருநாதரின் உத்தரவும் கிடைத்தது. ஏதும் தெரியாத நாங்கள் இருவரும் திகைத்துக் கொண்டிருந்தபோது குருநாதர் காஞ்சியில் தாய் அவர்கள் மூலம் நிட்டையில் காண்டம், படலம் முதலியத் தலைப்புகளும் அவ்வத்தலைப்புகளில் அமைய வேண்டிய செய்தி களையும் உணர்த்தி அருளினார். அப்போது அடியேன் மௌனத்தில் இருந்தேன். இவ்வாறாய் புராணத்தை எழுதி, வெளியிட்டது குருநாதரின் கருணையே. விண்ணுலகத்தில் நான் இருந்தாலும் என்னுடைய அகம் கனிந்த நல்வாழ்த்துக்கள் எண்பது அகவை பூர்த்தியாகும் அருள்ஞான செல்வத்தாய்க்கு உரித்தாகுக. 19.12.2006 ஆகிய இந்நன்னாளில் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகளின் குருபூஜை அமைவது சிறப்பிற்குரியது.



ஓம்

### மதுரை ஸ்ரீ பரிபூரண விநாயகர் ஆலயத்தின் முக்கிய முன்னாள் கமிட்டி மெம்பர்கள்

இடமிருந்து வலம் : அருள்ஞானச் செல்வத்தாய் (சு. மங்கையர்க்கரசியார்), ஜஸ்டிஸ் திரு.கிருஷ்ணசாமி ரெட்டியார் அவர்கள், அறநெறியண்ணல், சைவசமய சேவாமணி, தமிழ்மறைக்காவலர் கி.பழனியப்பனார் அவர்கள், வலது ஓரம் பாலகவி சுவாமிகள், பின்புறம் மையத்தில் இருப்பவர் ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருப்பணிக்குழுவின் செயலர் மாம்பலம் சுவாமிகள் (தவத்திரு.கே.சாம்பசிவ ஐயர்) அவர்கள் ஆகியோர் இப்படத்தில் உள்ளனர்.

ஓம்

**திரு.கி.பழனியப்பனார்** அவர்கள், (உரிமை : செய்திப்பத்திரிகை, மதுரை) அவர்களின் வாழ்த்து பின்வருமாறு:

பல நூல்களைச் செய்யுள் வடிவிலும், உரைநடை வடிவிலும் திரு. பாலகவி சுவாமிகள் இயற்றியுள்ளனர் என்பது உலகறிந்த செய்தி. சுவாமிகளின் ஜெயந்தி விழாவில் கருணை மிகு வள்ளல் அருள்நிறை சரிதம் ஆகிய நூல் (ஸ்ரீஇரெட்டியப்பட்டி சுவாமிகள் புராணம்) வெளிவருவது சாலச்சிறந்தது. இந்நூல் உருவாகவும், அச்சாகி வெளி வரவும், ஆசிரியராகிய திரு. பாலகவி சுவாமிகளுக்கு உறுதுணையாயிருந்து எல்லா வகையிலும் உதவி புரிந்து ஊக்குவித்த தனிச் சிறப்பு சுவாமிகளின் சிறந்த அடியாராக விளங்கும் காஞ்சி வித்வான், சு. மங்கையர்க்கரசி என்னும் அருள்ஞான செல்வத்தாய் அவர்களைச் சாரும். 80வது அகவை நிறைவு காணும் அவர்களைப் பல்லாண்டு பல்லாண்டு பலகோடி நூறாண்டு காலம் வாழ்க! என மனமார வாழ்த்துகின்றேன்.



# உம் பாத யாத்திரை

9.6.1972ல் காஞ்சிபுரத்தில் துவங்கி 23.7.1972ல் இரெட்டியப்பட்டியில் இனிது பூர்த்தி செய்த பாதயாத்திரையில் கலந்து கொண்டோர் பெயர் பட்டியல்...

1. அருள்ஞான செல்வத்தாய்-திருமதி.சு. மங்கையர்க்கரசி அம்மையார், காஞ்சி
2. பாலகவி. சற்குருதாசன் திரு.எம்.கே.வேங்கடராமசெட்டியார், ஆனத்தூர்
3. தவத்திரு. அருட்கவி ஸாதுராம் ஸ்வாமிகள், சென்னை
4. திரு.வே. இராமலிங்கம், பி.ஈ., நெய்வேலி
5. திரு.கே. சாரங்கபாணி செட்டியார், சேலம்
6. திரு. ஜெயலட்சுமி அம்மாள், நாகை
7. திரு. கலியரத்தினம் அம்மாள், திருவண்ணாமலை
8. திரு.கே. கிருஷ்ணமூர்த்தி குப்தா, எல்.ஈ.ஈ., கலசப்பாக்கம்
9. திரு.ஆர். விஜயரங்க சுவாமிகள், மன்னார்பாளையம்
10. திரு.சி.வி. இராமச்சந்திரசெட்டியார், சேலம்
11. திருமதி. ஆர். பாரதி இராமச்சந்திரன், சேலம்
12. திரு.எஸ். கிருஷ்ணமூர்த்தி ஐயர், கும்பகோணம்
13. திரு.எஸ். சந்திரஹாசன் செட்டியார், டி.என்.ஈ.பி., மேட்டூர் அணை
14. திருமதி.எஸ். பத்மா சந்திரஹாசன், மேட்டூர் அணை

**திரு. C.P.K. ஷண்முகசுந்தரம் நினைவு அறக்கட்டளை**

சி.வி.ஆர். தெரு, (செட்டி தெரு), சின்ன காஞ்சிபுரம்

**ஆண்டவர் வாக்கு :-** நமது சுவாமிகள் திருக்காப்பிட்டுக் கொள்ளும் நிலையை அடியார்களுக்குக் குறிப்பாக உணர்த்தும் பொருட்டு அடியார்களின் நிட்டையில், சாமி தங்கியிருக்க ஓர் இடம் கொடுக்குமா? என்று ஒருமுறையும், சாமிக்கு இடம் கிடைத்துப் போச்சு என்று அடுத்தபடியும் கூறியருளினார்கள்.